4 பக்கம் விலை 0—1—0

JANASAKTHI
Phone 85777

இலங்கையில் 10 சதம்

# ஜனசக்தி

கம்யூனிஸ்ட் கட்சி தின இதழ்
COMMUNIST TAMIL DAILY

மலர் 8 | சென்னை 26—6—'52 வியாழன் ★ வெளியூர் 27—6—'52 வெள்ளி | இதழ் 191

## இந்தியா பற்றி சோவியத் செய்திப்படம்

லண்டன். ஜூன் 25—

"இந்திய நாட்டில்" என்ற ஒப்பற்ற வர்ண செய்திப் படத்தை மாஸ்கோ பிலிம் ஸ்டூடியோ தயாரித்திருக்கிறது. சமீபத்தில் சோவியத் சினிமா கோஷ்டியினர் இந்தியா வந்திருந்தபோது, சுற்றிப்பார்த்த பல இடங்களையும் நிகழ்ச்சிகளையும் படம்பிடித்ததைத் தொகுத்தே இந்த செய்திப்படம் தயாரிக்கப் பட்டிருக்கிறது.

## அமெரிக்கரோடுகள் ஆபத்துமயம்

நியூயார்க், ஜூன் 24—

கடந்த 4 மாதங்களில் கொரியப் போர் முனையில் கொல்லப்பட்ட அமெரிக்கர்களைவிட 21 மடங்கு அதிகமாக அமெரிக்காவில் கார் விபத்துகளால் மக்கள் கொல்லப்பட்டிருக்கிறார்களாம். கடந்த இரண்டு வருடங்களில் 74,500 பேர்கள் அமெரிக்காவில் ரோட் விபத்துகளில் கொல்லப்பட்டிருக்கின்றனர். இதே சமயம் கொரியாவில் அமெரிக்கத் துருப்புகள் கொல்லப்பட்டது 19,350 பேர்கள்தானாம்.

# "காவற்கைதியை போலீஸ் கொன்றிருக்கலாம்"

## சுப்ரீம் கோர்ட்டில் நீதிபதி போஸ் குறிப்பு

## ஜனார்த்தனாச்சாரி எங்கே? என்ன ஆனார்?

### கைது செய்யப்பட்டவர்பற்றி எத்தகைய தகவலும் இல்லை

புதுடில்லி, ஜூன். 25—

"பாதுகாப்புக் கைதி ஜனார்த்தனாச்சாரியை போலீஸ் கொலை செய்திருக்கக்கூடும்" என இன்று சுப்ரீம் கோர்ட்டில் நீதிபதி விவியன் போஸ் ஒரு ஹேபியஸ் கார்ப்பஸ் மனுவை விசாரிக்கையில் குறிப்பிட்டார்.

தோழர் ஜனார்த்தனாச்சாரி கிருஷ்ணா ஜில்லா ஸ்ரீபுரத்தைச் சேர்ந்தவர். இவர் 17-6-50ல் கைது செய்யப்பட்டு கொலைக்குற்றம் சாட்டப்பட்டார். ஆனால் இவர் குற்ற மற்றவர் எனக்கூறி மாஜிஸ்ட்ரேட் இவரை விடுதலை செய்யும்படி உத்திரவிட்டார். ஆனால் விடுதலை செய்யப்படவில்லை.

1950-ம் வருட ஆகஸ்ட் மாதத்திலிருந்து பாதுகாப்புக் கைதியாயிருந்த தோழர் ஜனார்த்தனாச்சாரியைப் பற்றி எவ்வித தகவலும் இல்லை. அவரைக் கோர்ட்டில் ஆஜர்படுத்தி விடுதலை செய்ய வேண்டுமென அவருடைய சகோதரர் ஹேபியஸ் கார்ப்பஸ் மனு சுப்ரீம் கோர்ட்டில் தாக்கல் செய்திருந்தார். இம்மனுவின் மீதுதான் விசாரணை நடைபெற்று வருகிறது.

பாதுகாப்புக் கைதி ஜனார்த்தனாச்சாரியை சென்னை ராஜ்ய போலீஸ்வசம் ஒப்படைத்து விட்டதாக ஹைதராபாத் போலீஸ் கூறுகிறது. ஹைதராபாத் போலீஸ் வசம் அவரை ஒப்படைத்ததாக சென்னைராஜ்ய போலீஸ் கூறுகிறது. இதுபற்றிய எல்லா தஸ்தாவேஜுகளையும் கோட்டில் சமர்ப்பிக்கும்படி நீதிபதி விவியன் போஸ் ஜூன் 2-ம் தேதியன்று உத்திரவிட்டிருந்தார்.

"வாரங்கல் ஜில்லாவைச் சேர்ந்த கம்மாமேட்டிற்கு பாதுகாப்புக் கைதியாகக் கொண்டு வந்ததாக போலீஸ் இன்ஸ்பெக்டர் அப்பாராவ் கூறுகிறார். பாதுகாப்புக் கைதி மறுபடியும் சென்னை ராஜ்ஜியத்திற்குத் திருப்பி அனுப்பப்பட்டதாக அவர் மேலும் கூறுகிறார். இதை சென்னை அதிகாரிகள் மறுக்கின்றனர். சென்னை போலீஸ் அதிகாரிகள் வசம் பாதுகாப்புக் கைதியை ஒப்படைத்ததற்கு ரசீது இருக்க வேண்டும்" என நீதிபதி போஸ் கூறினார்.

"எங்கே அத்தகைய ரசீது? எத்தகைய தஸ்தாவேஜும் இல்லாமல் கைதிகளை அங்கும் இங்கும் அப்புறப் படுத்துவதில்லையே" என மேலும் அவர் கேட்டார். எத்தகைய தஸ்தாவேஜும் இல்லை என அட்வகேட் ஜெனரல் கூறினார்.

நீதிபதி போஸ்: "இது மிகவும் முக்கிய விஷயம் பாதுகாப்புக் கைதியை போலீஸ் கொலை செய்திருக்கக்கூடும் போலீசினால் அவர் கொலை செய்யப்பட்டார் என நான் கூறவில்லை ஆனால் கொலை செய்யப்பட்டிருக்கக்கூடும்."

சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளைப் பரிசீலனை செய்து இது பற்றி மேல் விபரங்களை ஜூலை 28ம் தேதி சுப்ரீம் கோர்டில் அறிவிக்கும்படி போலீஸ் இன்ஸ்பெக்டர் அப்பாராவுக்கு நீதிபதி உத்திரவிட்டார்.

"கைகால்கள் கட்டப்பட்டு அனேகம் பேர்கள் போலீசாரால் சுட்டுக் கொல்லப்பட்டனர். கைதிகள் தப்பித்து ஓட முயற்சித்ததால் சுட்டுக்கொல்ல நேர்ந்தது என கோர்ட்டுகளில் போலீஸ் வாக்குமூலம் கொடுத்திருக்கிறது 40 பேர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களை பற்றிய ஒரு தகவலும் இதுவரை தெரியவில்லை. இவர்கள் உயிருடன் இருக்கிறார்களா இல்லையா என்பதே தெரியாது" என தோழர் ஏ. கே. கோபாலன் போலீஸ் அட்டூழியங்களைப்பற்றி பார்லிமெண்டில் பேசுகையில் குறிப்பிட்டார்.

## "இன்றும் ஜாலியன்வாலா பாக் நடக்கிறது" —ஏ. கே. கோபாலன்

### காங்கிரஸ் மெம்பரின் அவதூறுக்கு தோழர் ஏ. கே. கோபாலன் பதில்

புது டில்லி, ஜூன் 25—

இன்று பார்லிமெண்டில், உள்நாட்டு மந்திரி இலாகா மான்யம் பற்றி எழுந்த விவாதத்தில், நாட்டில் பிரஜா உரிமைகள் பறிக்கப்படுவதை எதிர்க்கட்சி மெம்பர்கள் பலமாகக் கண்டித்தனர். தோழர் ஏ. கே. கோபாலன் கொண்டுவந்த சர்க்காரைக் கண்டிக்கும் பிரேரணைக்கு 68 ஓட்டுகள் கிடைத்தன. காங்கிரசுக்கு ஆதரவாக 227 பேர் ஓட்டளித்தனர்.

தோழர் ஏ. கே. கோபாலன் பேசுகையில், நாட்டில் நடைபெற்ற போலீஸ் அட்டூழியங்களைப் பற்றியெல்லாம் விசாரணை செய்ய வேண்டுமென்றால், கம்யூனிஸ்டுகளென்று தங்களுக்கு சந்தேகம் ஏற்படுபவர்களை மரத்தில் கட்டி வைத்து, போலீசார் சுட்டுக் கொன்றுள்ள சம்பவங்களை தோழர் ஏ. கே. ஜி. எடுத்துக் கூறினார்.

ஹைகோர்ட்டிலும். சுப்ரீம் கோர்ட்டிலும், ஹேபியஸ் கார்பஸ் மனுக்களை தாக்கல் செய்த காவற் கைதிகள் கோர்ட்டுகளுக்குக் கொண்டு வரப்படாமல் ரகசியமாக சுட்டுத் தள்ளப்படுவதை எடுத்துக் கூறினார். கடந்தகாலத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் செய்த ஜாலியன்வாலா பாக்குகளைப் போலவே, இன்று காங்கிரஸ் சர்க்கார்களும் செய்வதை எடுத்துக்கூறி, சேலம் சிறையில் 23 பேர்கள் சுட்டுத்தள்ளப்பட்டதை சுட்டிக் காட்டினார்.

போலீஸ்காரர்களுக்கு, அவர்கள் மக்களின் சேவர்கள் என்ற முறையில் புதிய முறையில் பயிற்சி கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தினர்.

### தடுப்புக்காவல் சட்டம் ஒழிக!

டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி (தேசிய ஜனநாயகக் கட்சி) பேசுகையில், தடுப்புக்காவல் சட்டத்தை இந்திய சட்ட புத்தகத்திற்கே ஒரு பெரிய களங்கம் என்று வர்ணித்தார்.

எஸ். வி. ராமசாமி என்ற ஒரு காங்கிரஸ் மெம்பர் தடுப்புக்

(2-ம் பக்கம் பார்க்க)

## யாலு நதிக்கரையில் அமெரிக்க குண்டுவீச்சு

### உலகெங்கும் பலத்த கண்டனம்

### பார்லிமெண்டில் ஒத்திவைப்புப் பிரேரணை!

கொரியாவில் யாலு நதிக்கரையில் மின்சார விசை நிலயங்களின்மீது அமெரிக்க யுத்த வெறியர்கள் மிருகத்தனமான குண்டு வீச்சு நடத்தினதை எதிர்த்து உலகெங்கும் பலத்த கண்டனக் குரல்கள் கிளம்பி யிருக்கின்றன.

புதுடில்லி, ஜூன் 25—

"சீனாவுக்கும், கொரியாவிற்கும் மின்சாரம் சப்ளை செய்யும் விசை நிலயங்களின்மீது அமெரிக்க ஏகாதிபத்ய வாதிகள் திட்டமிட்டு நடத்தியுள்ள இந்த குண்டு வீச்சு, சீனாவை யுத்தத்திற்கிழுக்கும் ஒரு ஆத்திர மூட்டும் செய்கையாகும்; மேலும் உலக யுத்தத்திற்கு தூண்டும் செய்கையாகும். ஆகவே இதைப் பற்றி விவாதிப்பதற்காக, பார்லிமெண்ட் ஒத்தி வைக்கப்பட வேண்டும் என்று கம்யூனிஸ்ட் தலைவர் ஏ. கே. கோபாலன் ஒரு ஒத்திவைப்புப் பிரேரணையைக் கொண்டு வந்தார்.

ஆனால் காங்கிரஸ் சபாநாயகர் மாவலங்கர் இந்தப் பிரேரணையை நிராகரித்து விட்டார். தொழிலாளர் விவசாயிகள் கட்சித் தலைவர் எஸ். எஸ். மோரே—கம்யூனிஸ்ட் மெம்பர் ஹீரன் முகர்ஜி, ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா (சுயேச்சை) ஆகியோரும் அமெரிக்க செய்கையைக் கண்டித்துப் பேசினர்.

### அட்லியின் கண்டனம்

பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அமெரிக்க குண்டு வீச்சைப்பற்றி விவாதம் தொடர்ந்து நடந்தபொழுது, பிரிட்டிஷ் அயல்நாட்டு மந்திரி அந்தோணி ஈடன், "வட கொரிய விசை நிலயங்களின் மீது இந்த நாசகரமான தாக்குதல்கள் நடத்தப்படுவதற்கு முன்னால் அமெரிக்கா எங்களைக் கலந்து கொள்ளவில்லை" என்று வருத்தம் தெரிவித்தார்.

அமெரிக்க செய்கையைக் கண்டித்து அட்லி பேசுகையில், "இத்தாக்குதல், யுத்த நிறுத்தப் பேச்சுவார்த்தைகளை பெரிதும் பாதிக்கும்; கிழக்கில் ஒரு பெரிய யுத்தமூளும் அபாயத்திற்கு இது நம்மைக் கொண்டு செல்கிறது. அவ்வாறு ஏற்பட்டால் அது எங்குபோய் நிற்குமோ என்பது யாருக்கும் தெரியாது" என்றார்.

### சென்னையில் கண்டனம்

சென்னை. ஜூன் 26—

நேற்று மாலை திருவல்லிக்கேணி திலகர் கட்டத்தில் சென்னை கம்யூனிஸ்ட் கட்சி சார்பிலும், டிராம்வே தொழிலாளர் சங்கம், மதராஸ் பிரஸ் லேபர் யூனியன், கார்பரேஷன் லேபர் யூனியன் இன்னும் சில தொழிற் சங்கங்களின சார்பிலும் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், அமெரிக்க ஏகாதிபத்யவாதிகள் யாலு நதிக்கரையில் காட்டுமிராண்டித் தனமான முறையில் குண்டு வீசியது பலமாகக் கண்டிக்கப்பட்டது.

கூட்டத்திற்கு கே. கிருஷ்ணராவ் எம். எல். ஏ. தலைமை வகித்தார்.

தோழர் மோஹன் குமாரமங்கலம் பேசுகையில் கடந்த 2 ஆண்டுகளாக கொரியாவில் அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்கள் செய்த மிலேச்சத்தனமான அட்டூழியங்களை எடுத்துக்கூறி கண்டித்தார். மேலும் இந்திய சர்க்கார் இவ் விஷயத்தில் தலையிட்டு அமெரிக்க ஆக்கிரமிப்பைக் கண்டித்து, கொரியாவில் யுத்தநிறுத்தம் உடனே ஏற்படவேண்டுமென்று வற்புறுத்த வேண்டுமென்றார்.

பிறகு தோழர் நாகிரெட்டி எம். எல். ஏ., பேசுகையில் கொரியாவில் அமெரிக்கர் விஷக்கிருமி விஷவாயு உபயோகிப்பதை பலமாகக் கண்டித்தார்.

தோழர் பி. ராமமூர்த்தி எம். எல். ஏ. பேசுகையில் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள், எவ்வாறு உலகம் பூராவையும் அடிமைப்படுத்தும் முயற்சியில் இறங்கியுள்ளனரென்றும், விஷக்கிருமி யுத்தம் பற்றிய 1925 ஜினிவா ஒப்பந்தத்தில் கையெழுத்திட அமெரிக்கா மறுத்து வருவதைப் பற்றியும் எடுத்து

(2-ம் பக்கம் பார்க்க)

## பம்பாய் ராஜ்யத்தில் புதிய வரிகள்!

### விற்பனை வரி பெட்ரோல் வரி அதிகரிப்பு

பூனா, ஜூன் 26—

பம்பாய் ராஜ்ய நிதி, தொழில் மந்திரி டாக்டர் ஜீவராஜ் மேதா இன்று 1952-53 பட்ஜெட்டை ராஜ்ய அசெம்பிளியில் சமர்ப்பித்தார்.

பம்பாய் சர்க்கார் அபிவிருத்தித் திட்டங்களையும், நிவாரணங்களையும் அளிக்கப்போவதாகவும், விலைவாசி வீழ்ச்சியால் வருமானம் குறைந்துவிட்டதாகவும் கூறி வரியை ஏராளமாக அதிகரித்துள்ளனர். புதிய வரிகளை போட்டுள்ளனர். இதன் மூலம் சர்க்காருக்கு $4\frac{1}{2}$ கோடி ரூபாய் வருமானத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

1. விற்பனைவரி ஒரே தடவை ரூபாய்க்கு $\frac{1}{2}$ அணாவாக விதிக்கப்பட்டுள்ளதற்கு பதிலாக, புதிய பட்ஜெட்டின்படி $\frac{1}{4}$ அணாவீதம் பல தடவைகள் சரக்குகள் ஒவ்வொரு கை மாறும்போதும் விதிக்கப்படும். மொத்த வருமானம் 250 லக்ஷம் ரூபாய்.

2. நில வருமானத்திற்கு உபரி வரி 95 லக்ஷ ரூபாய.

3. மோட்டார் கார் வரி அதிகரிக்கப்படும்; 50லக்ஷ ரூபாய்.

4. பெட்ரோல் விற்பனை வரி ரூ. 75 லக்ஷம்.

## பம்பாய் கள்ளமார்க்கட் காரர்களின் பெட்டகம்

பம்பாய், ஜூன் 25—

உத்தர பிரதேச கவர்னராய் இருந்து 3 வருடங்களுக்குப் பிறகு பம்பாய் திரும்பிய திரு. ஹெச். பி. மோடி பம்பாய் நகரம் கள்ள மார்க்கட், கொள்ளை லாபக்காரர்களின் பெட்டகமாக விளங்குவதாக இன்று கூறினார். மேலும் பம்பாயில் ஒவ்வொரு பகுதியிலும் குடிசைகள் அதிகரித்து வருவதாகவும், பார்வைக்குத் தான்ந கரம் அழகாகவும், செல்வம் நிறைந்ததாகவும் காணப்படுகிறது என்றும் விபசாரம் அதிகரித்து வருவதாகவும் கூறினார்.

" அபிப்பிராயம் வெளியிடும் சுதந்திரம் நமது பிறப்புரிமை; அரசியல் சட்டத்தின்மூலம் அது பரிபூரணமாக உத்தரவாதம் செய்யப்பட்டாலொழிய நாம் ஓய்ந்திருக்க மாட்டோம் "


ஜனசக்தி

வியாழக்கிழமை 26-6-1952


# யுத்த வெறியருக்கு விலங்கிடுக!

சமாதானத்தின் எதிரி யார்? யுத்தவெறி பிடித்த டாலர் அமெரிக்காதான். மஞ்சூரிய எல்லையிலுள்ள யாலு நதி மின்சார நிலையங்களை, ஐந்நூறு விமானங்களை அனுப்பித் தாக்கி, தகர்த்தெறிந்த நாசகார பீரங்கி அமெரிக்காதான்.

ஐ. நா.வின் தளபதியான அமெரிக்க ஜெனரல் கிளார்க்கின் கொலைகாரவிமானத் தாக்குதலுக்கு இரையான இலக்கு—இடங்கள்—விஷக் கிருமிகளின் நச்சுப் பொய்கைகளோ, யுத்தக் கொலைஞர்களின் வளர்ப்புப் பண்ணைகளோ அல்ல; வடகொரியா, மஞ்சூரியா (சீனு) ஆகிய நாடுகளுக்குப் பொதுவான சமாதான ஜனநாயக நிர்மாணிப்புகளின் வாழ்வுமையங்கள். இத்தகைய தொழில் கேந்திரங்களை, மின்சார நிலையங்களை அழித்தொழிக்க வரும் யுத்தக் காட்டாளர்களை, ஒழித்துக்கட்டப் போர்க்கொடியை உயர்த்துவதுதான் முறை.

அமெரிக்க ஓநாய்கள் சண்டைக்குத் தொண்டடித்து, யுத்தத்தை விஸ்தரிக்கக் கையாடிய காட்டுமிராண்டி முயற்சிதான் இது. சீனர்களும் வடகொரியர்களும் திட்டவட்டமாக, முன்னை விட வலுவான சாதகமான சூழ்நிலையில் இருக்கிறார்கள் இன்று. கிராதகனான ஜெனரல் கிளார்க்கின் சவாலை சீனுவும் வடகொரியாவும் ஏற்று, பதிலுக்கு பதில் கச்சையை வரிந்து கட்டியிருந்தால் என்னாகி இருக்கும்? மகத்தான சீன, கொரிய மக்களின் சமாதான உறுதி, மூன்றாவது உலக யுத்தம் மூளாமல் தவிர்த்திருக்கிறது.

கொரிய யுத்தத்தைப் பற்றிய சமாதானப் பேச்சு வார்த்தைகளில் யுத்தக் கைதிகள் பிரச்னைபற்றி ஐ. நா. சபையில் நடந்த விவாதத்தில் அமெரிக்காவின் வாதம், யுத்த முகாமைச் சேர்ந்த நாடுகளிடையேகூட எடுபடாத வாதமாகப் போய், அமெரிக்கா தனிமைப் படுத்தப்பட்டு படுதோல்வி யடைந்தது. கோஜே தீவில் அமெரிக்கா நடத்திய கொலைகாரக் கூத்து, உலக அபிப்பிராயத்தை எதிர்ப்பாகவே வளர்த்துவிட்டது. கிருமி யுத்தமும், ஆதரவாளர்களை அமெரிக்கா மேலும் மேலும் இழந்து கரிபூசிக் கொள்ளும்படியாக பாதகச் சூழ்நிலையையே உருவாக்கியது. சுருக்கிச் சொனனல், 2 ஆண்டு யுத்தத்தில் அமெரிக்காவுக்குப் படுதோல்வியே கிடைத்தது.

மேலும், கொரிய மக்களின் அசையாத உறுதி மாற்றேறிப் பிரகாசிக்கிறது. தெனகொரியாவில் அரசியல் நெருக்கடி முற்றி முதிர்ந்து வருகிறது. ஜப்பானிலும் உலக முழுவதிலும் சமீபத்தில் ஜூன் 25 தேதி நடந்த ஆர்ப்பாட்டங்களும் அபிப்பிராய வெளியீடுகளும் அமெரிக்க—எதிர்ப்பு தலை சுழலும் வேகத்தில் பெருகிவருவதைக் காட்டுகிறது. போதாக்குறைக்கு, அமெரிக்க ஆதரவாளர்களான ஆட்சியாளர்களிடையிலும் கருத்து வேற்றுமை அதிகரித்துவருகிறது.

இந்தச் சூழ்நிலையில்தான், யாலு நதி மின்சார நிலையங்களில் அமெரிக்க விமானங்களின் மிலேச்சத்தனமான தாக்குதல் நடந்திருக்கிறது. "நிரபராதிகளான பொதுமக்களின் பிணக்குவியல்கள் மலைபோல் குவிவதைக் கண்குளிரக் காணும்" மக்-ஆர்தர் நீசதந்திரமாகிய இந்த ஆத்திரமூட்டும் பேய்ச்செயலை உலக முழுவதும் ஒரு முகமாகக் குரலெழுப்பி கண்டிக்கிறது. 'இந்து', 'எக்ஸ்பிரஸ்', 'சுதேசமித்திரன்' போன்ற காங்கிரஸ் ஏடுகள்கூட, 'மக்கார்தரிசம்' என்றும், ரத்த வெறிபிடித்த 'யதேச்சாதிகாரம்' என்றும் வன்மையாகக் கண்டிக்கிற அளவுக்கு அமெரிக்க விமானத் தாக்குதலின் நீசநாசத்தனம் காட்சியளிக்கிறது.

இந்த சம்பவத்தால் அமெரிக்காவின் ஐ. நா. அரங்கத்தில் ஆட்டமும் பிளவும் அதிகரித்திருக்கின்றன. அமெரிக்காவின் யுத்தப் பங்காளிகளான அட்லிக்கும், ஈடனுக்குமிடையில் 'லடாய்' ஏற்பட்டிருக்கிறது. இறுத்தெடுத்த வணடல் யுத்த வெறியனான சர்ச்சில் கூட இந்த நிகழ்ச்சியை அப்படியே ஆதரிக்க முடியாது மூச்சுத் திணறுகிறான்.

அமெரிக்க விமானங்களின் இந்த சண்டாளத் தாக்குதல் தலைகால் புரியாத இரத்த வெறியால் வேண்டுமென்றே வம்புச் சண்டைக் கிழுத்த கொலைபாதகச் செயலாகும். ஐ. நா. அமெரிக்க போர்த் தலைமையிலிருந்து மக் ஆர்தர் மாறினாலும், மக் ஆர்தரிஸம் மாறவில்லை என்பதை இது எடுத்துக்காட்டுகிறது.

தென் கொரிய சியாங்-கே-ஷேக்கான சிங்மன் ரீயின் நிலப்பிரபுத்வ பாஸிஸ்ட் ஆட்சியை கொரியாவின்மீது திணித்து, கொரியாவை அமெரிக்க ஏகாதிபத்யத்தின் காலனியாக்கவே இரண்டாண்டுகளுக்குமுன் கொரியாவில் யுத்தத்தீ மூட்டப்பட்டது. இந்த யுத்தத் தீயை அவிக்கவே, கொரிய மக்கள் அறப்போர் தொடுத்தனர். இரண்டு வருடச் சரித்திரம் மக்களால் யுத்தத்தைத் தடுக்க முடியும், தவிர்க்கமுடியும், ஒழிக்க முடியும், என்பதை நிரூபித்துக் காட்டுகிறது.

கொரிய மக்களும் சீன மக்களும் சமாதானத்திற்காகவேதான் போராடுகிறார்கள். ஆனால் சமாதானம் ஒருதரப்பாரை மட்டும் பொறுத்ததல்ல. கொரியாவிலும் சீனுவிலும் சரி உலக முழுவதிலும் சரி சமாதானத்தை நிலைநாட்ட வேண்டுமானால், அமெரிக்க யுத்த வெறியர்களின் கொலைகார, சதிகாரச் செயல்களைத் தடுத்து நிறுத்தியாகவேண்டும்.

மக்-ஆர்தர் மாதிரி, கொலை பாதகனான மார்ஷல் கிளார்க்கும் ஆசியாவிலிருந்து வாபஸ் பெறப்பட வேண்டும். அமெரிக்க யுத்த வெறியர் ஒழிய, சிங்மன்-ரீயின் நிலப்பிரபுத்துவ பாசிஸ்ட் ஆட்சி ஒழிய, உலக யுத்தத்தைத் தடுக்க, ஜினேவா ஒப்பந்தப்படி யுத்தக் கைதிகளை அவரவர் சீமைக்கு அனுப்ப, சமாதான ஒப்பந்தம் வெற்றிகரமாக முடிவு பெற, கொரியாவின் பிரச்னைகளை கொரிய மக்களே முழு உரிமையுடன் தீர்த்துக்கொள்ள, உலக மக்களோடு இந்திய மக்களும் தோளோடு தோள் நின்று கிளர்ச்சி செய்ய வேண்டும்.

நேரு சர்க்கார் சிங்மன்ரீயின் கையை பலப்படுத்தும் யுத்த ஆதரவை உடனே நிறுத்தவேண்டும். உலக சமாதானத்தின் கடும் பகைவர்களான அமெரிக்க யுத்த வெறியர்களின் பேய்ச் செயல்களைத் தடுத்து நிறுத்த முழுமூச்சோடு கடமை யாற்ற முன்வர வேண்டும்.

## ஈட்டிமுனை

# ஜன்னிப் பிதற்றல்

ஏ. கே. கோபாலன் பார்லிமெண்டில் எழுந்து நிற்கும்போதெல்லாம் காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு ஜன்னி கண்டுவிடுகிறது, வெறிக்கூச்சல் கிளப்புகிறார்கள். பாம்பாட்டியின் மகுடியைக் கண்டதும் கருநாகம் சீறிப் படமெடுப்பது போல! ஆனால், பாம்புக்கு கடிக்க முடிவதில்லை, தலையைத் தரையிலடித்துச் சாய்கிறது. அண்டப்புளுகன் சத்ய நாராயணசின் ஹாமுன்புவைத்து வேட்டுகளைக் கிளப்பினான். கம்யூனிஸ்டுகளை அவதூறு செய்யும் தஸ்தாவேஜுகளை பார்லிமெண்டில் சமர்ப்பித்திருக்கிறான். அவற்றை எந்த காங்கிரஸ் ஏடும் எடுத்துப் பிரசுரிக்கவில்லை, பிரசுரிக்கத் துணியவில்லை. காரணம் அத்தனையும் மோசடி; பிரசுரித்தால் மக்களின் கோபச் சிரிப்பு காங்கிரசைச் சுட்டெரித்துவிடும்.

சின்ஹாவின் சீடர் சேலத்து இராமசாமி (காங்கிரஸ் எம். பி.). சேலம் சிறைக் கைதிகள் படுகொலையைப் பற்றி பேசிய தோழர் கோபாலன் ஓமந்தூர் மந்திரிசபை நியமித்த விசாரணை கமிட்டியின் ரிபோர்ட்டை காங்கிரஸ் சர்க்கார் வெளியிடவில்லை என்று குற்றம் சாட்டியபோது, இந்த வானரசேனைத் தளபதி துள்ளிக் குதித்தார். விசாரணைக் கமிட்டியின முடிவுகள் என்னவென்று கூற நேர்மையோ, ரோஷமோ இல்லை. ஜலியானவாலாபாக் நடத்திய சேலம் சிறையதிகாரிகளின கதையையே மீண்டும் வாந்தியெடுத்தார். அரசியல் ?படி!

இவர் ஒரு வக்கீலாம்; 22 வருட சர்வீசுள்ள பாரிஸ்டராம். சபாஷ், சேலம்சிறை ஜெனரல் டையர்களுக்கு நல்ல வக்கீல் தான். கொலை செய்தவனின் அபிப்பிராயமும், சாட்சியமுமே தீர்ப்பளிக்க போதுமாம்!

இந்த தர்மசீலர்தான் தேர்தல் காலத்தில் தனது தொகுதியில் ஏ. கே. கோபாலன் நேருவைத் தாக்கிப்பேசியதாகக் கூறுகிறார். அவர் தொகுதியில் ஏ. கே. ஜி. காலடி வைக்கவே இல்லை; எந்தக் காங்கிரஸ் ஏட்டை புரட்டிப்பார்த்தாலும் இதை அறிய முடியும். பாவம், புதுடில்லியில் வெப்பம் வக்கீலின் மூளையை உருக்கிவிட்டிருக்கிறது.

ஏ. கே. கோபாலன் காரில் இன்னொருவர் இருந்தாராம். அவர் நேருவின் குடலைப் பிடுங்கி மாலையாகப் போட்டுக் கொள்ளப் போவதாக பயமுறுத்திப் பேசினாராம். இதுவும் அபாண்டம் என்று தேர்தல் காலத்திலேயே மறுத்திருக்கிறோம், பத்திரிகை மூலமாகவும் அம்பலத்திற் கிழுத்திருக்கிறோம். கம்யூனிஸ்ட் தியாகிகள், தமிழ் வீரர்கள் மணவாளன் மாரி, இரணியன் முதலானோரை கொன்று குவித்து தாண்டவமாடியது காங்கிரசே! கம்யூனிஸ்ட்களின் கழுத்தில் விழுந்தது காங்கிரசின் தூக்குக் கயிறும், மக்களின் மலர்மாலைகளுமே, என்று அன்றும் இன்றும் தமிழகம் பெருமையுடன் பேசிக் கொள்கிறது. காங்கிரஸ் பாசக் கயிற்றுக்கு அஞ்சாத கம்யூனிஸ்டுகள் நேருவின் குடலைப் பிடுங்கி கழுத்திலணியப் போவதாகப் பேசுகிறார்கள் என்று கூறுவது தமிழகத்தை கேவலப் படுத்துவதாகும்.

இரத்தக் கறை படிந்த கையுடன், துடுக்குத் தனமாகப் பேசும் வக்கீல் ராமசாமிக்கு மக்களைப் பற்றி என்ன கவலை? ஒரு தடுப்பு காவல் சட்டம் போதாது, ஆயிரம் காவல் தடுப்புச்சட்டம் வேண்டும் என்று அவரே வாய்விட்டு கூறினாரே, அதில்தான் அவருக்குக் கவலை. ஒரு சேலம் ஜலியன் வாலா பாக் போதாது, அதைப் போல பல கொலைக் காட்சிகள் வேண்டுமாம்! ஊர் திரும்பியவுடன் வக்கீல் அய்யாவுக்கு கீழ்ப்பாக்கம் ஆஸ்பத்திரியில் இடம் ரிசர்வ்செய்ய வேண்டியதுதான்.

—வாசன்

# "வேலையிழந்த சர்க்கார் ஊழியர்கள் வியாபாரம் செய்து பிழைக்கலாம்"

## ராஜாஜியின் ஏளனப் பேச்சு

சென்னை, ஜூன். 25—

"ரேஷன் ஒழிப்பினால் வேலையிழந்த சர்க்கார் சிப்பந்திகள் வியாபாரம் செய்து பிழைக்கலாம்" என முதலமைச்சர் திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் குறிப்பிட்டார்.

கட்டுப்பாடு நீக்கப்பட்டதால் வியாபார நடவடிக்கைகள் மும்முரமா யிருக்கின்றன. வேலையிழந்த சர்க்கார் சிப்பந்திகள் கொஞ்சம் மனதை தைரியப்படுத்திக்கொண்டால் அவர்களுக்கு முன்னால் மிக விரிந்த சந்தர்ப்ப சூழ்நிலைகள் ஏற்பட்டுள்ளன. சர்க்கார் காரியாலயங்களில் சாதாரண குமஸ்தாவாக அடைபட்டு இருப்பதைவிட வியாபாரம் செய்துபிழைக்கும் பெரிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டுள்ளன என ராஜாஜி கூறினர்.

### ரேஷன் சிப்பந்திகளின் கோரிக்கை

"வேலையிலிருந்து நீக்கப்பட்ட எல்லா ரேஷன் சிப்பந்திகளையும் அதே சம்பளத்தில் வேறு இலாக்காக்களிலாவது வேலைக் கெடுத்துக் கொள்ளவேண்டும். வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படாதவர்களுக்கு அவர்களின் சர்வீசுக்குத் தக்கபடி கிராசுவடி கொடுக்கப்பட வேண்டும். இந்த சிப்பந்திகள் அனைவருக்கும் வேலை கொடுக்கும்வரையில் சர்க்கார் புதிதாக வேறுயாரையும் வேலைக்கு எடுக்கக்கூடாது" என முதலமைச்சர் திரு. ராஜகோபாலாச்சாரியாருக்கு ரேஷன் சிப்பந்திகள் சங்கம் ஒரு மகஜர் சமர்ப்பித்துள்ளது. திடீரென கட்டுப்பாடு நீக்கியவுடன், இந்த இலாக்காவில் வேலை செய்து வந்த பல்லாயிரக்கணக்கானவர்கள் வேலையிழந்து திண்டாடித் தவிக்கிறார்கள் என மகஜர் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. எனவே, இவர்களுக்கு உடனடியாக தக்க நிவாரணம் அளிக்க வேண்டுமென மகஜர் கோருகிறது.

## நடக்கவிருப்பவை

சென்னை. வண்ணாரப்பேட்டை பென்ஷனர் லைன் மைதானத்தில் (கிருஷ்ணா தியேட்டர் பக்கம்) 27-6-52 மாலை 5-30 மணிக்கு தோழர் பி. கருப்பண்ணன் தலைமையில் நகர பீடி கிளை நிர்வாகிகள் கூட்டம் நடைபெறும். தோழர்கள் ப. ஜீவானந்தம் எம். எல். ஏ., பி. ராமமூர்த்தி எம். எல். ஏ., எ. பாலசுப்ரமணியம் முதலியோர் பேசுவர்.

## இன்றும்....

(முதற் பக்க தொடர்ச்சி)

காவல் சட்டத்தை பலமாக ஆதரித்துப் பேசுகையில், தேர்தல் காலத்தில் ஏ. கே. கோபாலன், நம்பியார் முதலியவர்களெல்லாம் சேலத்திற்கு வந்து பலாத்காரப் பிரசாரம் செய்தார்களென்றும், நேருவைத் திட்டிப் பேசினார்களென்றும் கூறினார்.

"நான் தேர்தல் காலத்தில் சேலத்திற்கே வரவில்லை; இந்த மெம்பர் கூறுவது அத்தனையும் பொய்" என்று தோழர் கோபாலன் காங்கிரஸ் மெம்பரின் பொய் பிரசாரத்தை அம்பலப் படுத்தினார்.

மேலும் பேசுகையில், தோழர் ஏ. கே. கோபாலன், "சீனுவில் மந்திரிகள் ரூ. 500 தான் சம்பளம் பெறுகிறார்கள்; சாதாரணமான சர்க்கார் சிப்பந்திக்கு ரூ. 100 சம்பளம் கிடைக்கிறது. அதுபோல் இந்தியாவில் ஜனாதிபதியின் சம்பளத்தை ரூ. 3,000 ஆகக் குறைக்க வேண்டுமென்றும், மந்திரிகளின் சம்பளம் 1,000 ஆகக் குறைக்க வேண்டுமென்றும், சிப்பந்திகளின் சம்பளங்களை உயர்த்த வேண்டுமென்றும்கோரினார். உள்நாட்டு மந்திரி கட்ஜுவுக்குடனே ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்துவிட்டது; எங்கே தன்னுடைய சம்பளத்தில் கைவைத்து விடுவார்களோ என்ற எண்ணத்தில், தோழர் கோபாலன் கூறியதை "சுத்த பைத்தியக்காரத் தனம்" என்று கூறி புறக்கணித்தார்.

## யாலு நதி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ரைத்தார். அமெரிக்காவின் இந்த யுத்தவெறிச் செயல்களைக் கண்டித்து மக்கள் மிகப்பெரிய கிளர்ச்சி செய்ய வேண்டுமென்றார்.

**பத்திரிகைகள் கண்டனம்**

26-ந் தேதியிட்ட "இந்து" பத்திரிகை அமெரிக்காவின் இச்செய்கை மிகவும் ஆத்திர மூட்டும் செய்கை என்று தலையங்கத்தில் விமர்சனம் செய்துள்ளது. "இந்தியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகை இதை "மக் ஆர்தரிசம்" என்று கூறி பலமாகக்கண்டித்துள்ளது. "சுதேசமித்திரன்" பத்திரிகை இதை "அபாய முரசொலி" என்ற தலைப்பின்கீழ் ஒரு தலையங்கத்தில் கண்டித்துள்ளது.

# டிராம்வே தொழிலாளர் ஸ்ட்ரைக்

சென்னை, ஜூன் 26—

"25-6-52 புதன்கிழமை நடுப்பகல் 12 மணிக்கு ஒர்க்ஷாப் தொழிலாளர்கள் இடைவேளைச் சாப்பாட்டுக்காக வெளியே போகும்போது வழக்கப்படி வாச்மேன, எல்லா தொழிலாளர்களையும் சோதனை செய்து வெளியே அனுப்பிய பிறகு ஆஸ்டின் என்ற வெள்ளையன் (இஞ்சினீயர்) வெளியே சென்ற ஒரு மேஸ்திரியை அவமானப்படுத்தும் நோக்கத்துடன் கையைப் பிடித்து இழுத்து தன் ரூமுக்கு அழைத்து சென்று நிர்வாணமாக பரிசோதனை செய்தான். அவரிடம் கம்பெனிச் சாமான் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. இம்மாதிரிவேண்டுமென்றே தொழிலாளர்களை பயமுறுத்தும் நோக்கத்துடனும், கம்பெனி சட்டதிட்டங்களை மீறியும், வெள்ளைமுதலாளி நடந்துகொண்டான். இதை எதிர்த்து ஒர்க்ஷாப், கார் ஷெட் தொழிலாளர்கள், சுமார் 500 பேர் மேற்படி அதிகாரியின் நடவடிக்கைக்கு வருத்தம் தெரிவித்து மன்னிப்பு கோரவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். முதலாளியும் மேற்படி அதிகாரியும் மறுக்கவே, ஒருவரும் வேலை செய்யவில்லை. பிறகு அரசாங்க லேபர் ஆபீசர் வந்து தொழிலாளர்களிடம் பேசும்போது தொழிலாளர்கள் நியாயத்தை வற்புறுத்தி மன்னிப்பு கேட்கும்படி முதலாளிக்கு யோசனை கூறும்படி சொன்னார்கள். அதையும் முதலாளி ஏற்றுக்கொள்ளவில்லை. பிறகு லேபர் கமிஷனர் இதில் தலையிட்டு விசாரணைசெய்வதாக வாக்குறுதி கொடுத்ததின் பேரில், தொழிலாளர்கள், 26-6-52 காலை வழக்கம் போல் காலை வேலைக்குச் சென்று வேலை துடங்கினர்.

இந்த கிளர்ச்சியில் ஐ. என். டி. யு. ஸி.யில் சம்பந்தப்பட்ட தொழிலாளர்களும் பூரணமாக பங்கெடுத்துக்கொண்டனர்.

### நீர் பாசன வசதி

# செய்து கொடுக்காத சர்க்காருக்கு வரி வசூல் செய்ய உரிமை இல்லை

## ராமநாதபுரம் தாலுகா விவசாய ஊழியர் கூட்டம்

ராமநாதபுரம், ஜூன் 23—

ராமநாதபுரம் தாலுகா விவசாயிகள் மகாநாடு ஒன்றைக் கூட்டுவதற்காகத் திட்டங்கள் வகுக்கவும் ஓர் வரவேற்புக் கமிட்டி அமைக்கவும் தாலுகா விவசாய சங்க ஊழியர்கள் கூட்டம் நேற்றுக் காலை பொன்னு தியேட்டரில் விவசாய சங்க ஆர்கனைசர் தோழர் ஆறுமுக நாடார் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்திற்கு சுமார் 110 ஊழியர்கள் வந்திருந்தனர்.

தலைவர் முன்னுரையில் விவசாய சங்கத்தின் அவசியம் பற்றியும் மகாநாட்டின் முக்கியத்வம் பற்றியும் பேசினார். பிறகு ஜில்லா விவசாய சங்கக் காரியதரிசி தோழர் ஆதிமூலம் விவசாயிகள்முன் இன்றுள்ள பிரச்சினைகள் பற்றியும் ஜமீன் ஒழிப்பிற்குப் பிறகு விவசாயிகள் நிலை பற்றியும் அவற்றுக்கு விவசாயிகள் உடனடியாக செய்யவேண்டியது பற்றியும் ஆண்டிப்பட்டி அணைக்கட்டு பற்றியும் அதன் மூலம் ராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள ஏழு தாலுக்காக்களின் நீர்ப்பாசனம் பற்றியும் விரிவாகப் பேசினார். பிறகு கீழ்க்கண்ட வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டது. திரு. முத்திருளாண்டி சேர்வை தலைவர், திரு. ஆர். கே. ராமகிருஷ்ணன் உபதலைவர், திரு. எம். ஆறுமுகநாடார் காரியதரிசி, திரு. கு. மங்களசாமி, திரு. பரலகிருஷ்ணன் அழகிய நாகலிங்கம் முதலியோர் கூட்டு காரியதரிசிகளாகவும், கே. எம். சுந்தரம் பொக்கிஷதராகவும் மற்றும் 30 அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பிறகு முத்திருளாண்டி சேர்வை விவசாயிகள் ஒற்றுமை பற்றியும் மகாநாட்டை வெற்றிகரமாய் நடத்த வேண்டுமென்றும் பேசினார். திரு. சாத்தையா பேசுகையில் விவசாயிகள் ஒன்றுபட்டால்தான் அவர்கள் நிலை உயருமென்றும் ஆண்டிப்பட்டி அணைக்கட்டுத் திட்டம் நிறைவேறினால் ராமநாதபுரம் தாலுகா விவசாயிகளுக்கு சர்க்கார் செய்யும் துரோகமென்றும் நீர்பாசன வசதி செய்து கொடுக்காத சர்க்காருக்கு வரி வசூல் செய்ய உரிமை கிடையாதென்றும் கூறினார்.

தலைவர் முடிவுரையில் விவசாய சங்கத்திற்கு இந்தத் தாலுகாவில் குறைந்தபட்சம் மூவாயிரம் அங்கத்தினர்களாவது சேர்க்க வேண்டுமென்றும் மகாநாட்டுச் செலவுக்கு உத்தேசச் செலவு ரூபாய் 500 திரட்ட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். (ந.—கி.)

## காங்கிரஸ் எம்.எல்.ஏ. தேர்தல் செல்லாது!

### சவுராஷ்டிராவில் ஒரு தீர்ப்பு

பவநகர், ஜூன் 24—

சவுராஷ்டிரா சமஸ்தான யூனியன் சட்டசபைக்கு பிரபல காங்கிரஸ் அபேட்சகரான லல்லுபாய் கிஷோர்பாய் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லுபடியாகாது என்று பவநகர் செஷன்ஸ் நீதிபதி தீர்ப்பளித்துள்ளார்.

அவர் தன்னுடைய தீர்ப்பில், "காங்கிரஸ் அபேட்சகரை எதிர்த்து போட்டியிட்ட பிரஜா பக்ஷ் கட்சி அபேட்சகரின் அபேட்சை மனுவை தேர்தல் அதிகாரி அனுமதிக்க மறுத்தது தவறு, பிரஜா பக்ஷி அபேட்சகரான பிரபுதாஸ் ராம்ஜி சர்க்கார் கண்ட்ராக்டர் என்று காரணம் மறுப்பில் காட்டப்பட்டுள்ளது. அவர் கான்ட்ராக்டர் அல்ல; சர்க்கார் ஸ்டாக்கிஸ்டே. ஆகவே தேர்தலில் போட்டியிட அவருக்கு உரிமையுண்டு," என்று கூறியுள்ளார்.

## சோஷலிஸ்டுகள் எந்தப் பக்கம்?

### ஐ. ஜ. மு. தலைவர்களின் கேள்வி

மதுராந்தகம், ஜூன் 24—

ஜூன் 23-ந் தேதியன்று மதுராந்தகத்தில் ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் நடந்தது. இக்கூட்டத்திற்கு ஐக்கிய ஜனநாயக முன்னணியின் தலைவர்களும், சட்டசபை அங்கத்தினர்களுமான திரு. கே. விநாயகம், தோழர் ப. ஜீவானந்தம் அழைக்கப்பட்டிருந்தனர். கூட்டத்திற்கு தலைமை வகித்த திரு. ஆதிகேசவலு நாயக்கர், ஐ. ஜ. மு.வின் தோற்றத்தையும், அவசியத்தையும் விரிவாக எடுத்துரைத்து, காங்கிரஸ் கவர்னர் ஸ்ரீபிரகாசா கையாண்ட தந்திரங்களையும் கண்டித்து பேசினார். திரு. விநாயகம் தனது சிற்றுரையில் முக்கியமாக சோஷலிஸ்டுகளின் கொள்கையை அம்பலப்படுத்தி, இந்நாட்டில் இனி காங்கிரஸ், கம்யூனிஸ்ட் என்ற இரண்டே கட்சிகள் தான் இருக்க முடியும் என்று கூறினார். சோஷலிஸ்டுகளை இவ்விரண்டு கட்சிகளில் ஒன்றில் ஐக்கியமாகும்படி வேண்டிக் கொண்டார்.

மதுராந்தகத்திற்கு தோழர் ஜீவாவின் முதல் விஜயத்தை குறிப்பிட்டு கடுக்கலூர் முற்போக்கு நூல் நிலையத்தார் அவருக்கு ஒரு வரவேற்பு பத்திரத்தை அளித்தனர். தி. க., தி. மு. க.வின் சார்பாகவும் ஜீவாவிற்கு பூமாலைகள்சூட்டப்பட்டன. மதுராந்தகம் மக்களின் அன்பையும் ஆர்வத்தையும் பாராட்டி அவர்களுக்கு தனது நன்றியையும் செலுத்திவிட்டு, ஜீவா ஒரு நீண்ட சொற்பொழிவு ஆற்றினார். தனது பேருரையில் அவர் ஐக்கிய ஜனநாயக முன்னணி ஏற்பட வேண்டிய காரணங்களை விவரித்து, காங்கிரஸ் ஜனவிரோத ஆட்சி மாறினால் அதற்கு பதில் ஒரு மக்கள் ஆட்சியை நிலைநாட்டுவதற்கு ஒரு ஐ. ஜ. முன்னணியே தேவை என்றார். ஆசியாவிலேயே ஒரு சூரியனைப்போல் பிரகாசிக்கின்ற, மக்கள் ஜனநாயக ஆட்சி நடக்கின்ற புது சீனவை ஒழித்து கட்டவேண்டும் என்று சொல்லும் சோஷலிஸ்ட்களின் போக்கை தோழர் ஜீவா கண்டித்தார். முடிவில், கைத்தறி நெசவாளர்களின் கதியை உருக்கமாக சித்தரித்து, காங்கிரஸ் ஆட்சியினால் வந்த கேட்டை ஆவேசத்துடன் வர்ணித்து, மக்கள் ஆட்சியின் அவசியத்தை எடுத்து காட்டினார்.

பாலன் தூக்கு தண்டனை ரத்து செய்யுமாறு ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது; பலர் கையொப்பமிட்ட ஒரு மகஜரும் ராஷ்ட்ரபதிக்கு அனுப்பவதற்காக சமர்ப்பிக்கப்பட்டது.

## ராஜாஜி தயங்குவானேன்?

### தி. மு. க. தோழர் சம்பத் கேள்வி

22-6-52 மாலை சேலம் போஸ் மைதானத்தில் சேலம் ஜில்லா தி. மு. கழகத்தின் சார்பில் நடைபெற்ற பொதுக் கூட்டத்திற்கு தோழர் ஜி. பி. சோமசுந்தரம் தலைமை வகித்தார். தோழர் மதியழகன் பி. ஏ. பேசியபின் தோழர் ஈ. வி. கே. சம்பத் பேசினார். அவர் பேசுகையில், "மக்கள் தீர்ப்புக்கு விரோதமாக கொல்லைப்புற வாசல் வழியாக காங்கிரஸ் மந்திரிசபை அமைக்கப்பட்டுள்ளது. இந்த சர்க்கார் ஆரம்பமான அன்றே தடையுத்தரவுடன், ஆயுதமேந்திய குதிரைப்படை போலீஸாருடன் ஆட்சி ஆரம்பமாகியுள்ளது என்பதைப் பார்த்தால் இந்த சர்க்கார் ஜனநாயக சர்க்காரா இல்லையா என்பது தெளிவாகும்" என்றார். மேலும்...சட்டவிரோதமான முறையில் கவுன்சிலில் நுழைந்துள்ள சி. ஆர். ஏன் தேர்தலில் போட்டியிடக்கூடாது என சவால் விடுத்தார். சிறைகளுக்குள்ளே அடைபட்டுக் கிடந்தவர்களும, தலைமறைவாக இருந்தவர்களும் அவரவர் தொகுதி வாக்காளர்களின் முகத்தையே பார்க்காமல் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்றிருக்கும்போது இவர் ஏன் போட்டியிடக்கூடாது என்றார். மேலும் போட்டியிட தனக்கு வயது தள்ளாத காலத்தில் இயலாது என்கிறாரே, ராஜாஜி—தேர்தலில் போட்டியிட 1 நாளைக்கு 20 தண்டால் 40 பஸ்கி, 100 கெஜத்தை $2\frac{1}{4}$ செகண்டில் கடக்கும் யோக்யதாம்சம் உடையவர்கள்தான் போட்டியிட வேண்டும் என ஏதாவது நிபந்தனை உள்ளதா? ஏதும் இல்லையே அப்படியிருக்க ஏன் ஆச்சாரியார் மழுப்பவேண்டுமென்றார். மேலும் "மழை பெய்வதற்காக பஜகோவிந்தம் பாடுங்கள் என உபதேசம் செய்யும் ஆச்சாரியார் ஐந்து ஆண்டுகளாக எங்கே சென்றார். அதுவும் ஏப்ரலுக்கு முன் எங்கே சென்றார். பஜகோவிந்தம் பாடும் ஆச்சாரியார் மதப் பிரச்சாரம் செய்யவா ஆட்சி பீடம் ஏறினார் என்று பேசினார்.

## சேலம் ஜில்லாவை பஞ்சப் பிரதேசமாக பிரகடனம் செய்க

### கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்கள் கோரிக்கை

சேலம், ஜூன் 21—

21-6-52 சனிக்கிழமை மாலை 3-30 மணிக்கு நாமக்கல் தொகுதி எம். எல். ஏ., கே. வி. ராமசாமி, திருச்செங்கோடு எம்.எல்.ஏ., டி. எஸ். அர்த்தனாரி, சேலம் ஜில்லா விவசாய சங்க காரியதரிசி, வி. இளங்கோ, ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி ஜி. சாமுவேல் ஆகிய நால்வரும் சேலம் ஜில்லா கலெக்டர் அவர்களை சந்தித்து ஜில்லா நிலைமைபற்றி இரண்டு மணி நேரத்திற்குமேல் விவாதித்தனர்.

ஜில்லாவின் பஞ்ச நிலைமைப் பற்றியும் மக்கள் படும் அவதியைப்பற்றியும், அதைப்போக்க சர்க்கார் உடனடியாக எடுக்க வேண்டிய நடவடிக்கைபற்றியும் விவாதம் செய்து ஒரு யாதாஸ்தைக் கலெக்டரிடம் சமர்ப்பித்தனர்.

அதில் ஜில்லா பூராவும் மழை இன்மையால் மக்கள் பெரும் அவதிக்குள்ளாகி இருக்கின்றனர். திருச்செங்கோடு, நாமக்கல் இராசிபுரம். ஆகிய தாலூக்காக்களில் குடிதண்ணீர் கஷ்டம் மிகவும் அதிகமாக இருக்கின்றது. கிராமப்புறங்களில் உள்ள விவசாயிகளின் கிணறுகளில் தண்ணீர் கிடையாது விவசாயம் க்ஷீணித்துக்கொண்டே போகின்றது. விவசாயிகளின் கால்நடைகளுக்கு தீவனம் கிடையாது. கைத்தறி நெசவாளர்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர். தினம் தினம் பிச்சைக்காரர்களாகி வருகின்றனர். கிராமப்புறங்களிலுள்ள நெசவாளர்களும், விவசாயிகளும். வெளியூர்களுக்கும் மலேயாவுக்கும் பிரயாணமாகின்றனர். ராயலசீமாவின் நிலைமை இங்கேயும் விரைவில் ஏற்படும் நிலைமையுள்ளது. இந்த நிலைமையை நீடிக்கவிட்டால் மிகப் பெரிய அபாயம் ஜில்லாவிற்கு ஏற்படும். ஆகவே இந்த அபாயத்திலிருந்து ஜில்லாவை பாதுகாக்க பினகண்ட நடவடிக்கைகளை உடனடியாக எடுத்தாகவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டனர்.

1. சேலம் ஜில்லாவை பஞ்சப் பிரதேசம் என பிரகடனம் செய்ய வேண்டும். ஜில்லா பூராவும் கஞ்சித் தொட்டி நடத்தல், பஞ்ச நிவாரண நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபடவேண்டும்.

2. குடி தண்ணீர் கிணறுகளையும் நீர்பாசனத்திற்கான கிணறுகளையும் ஆழப்படுத்த வேண்டும்.

3. பாழடைந்துள்ள ஏரி குளங்களை மராமத்து செய்தல்.

4. தரிசு நிலங்களை விவசாயிகளுக்கு கொடுத்தல், விவசாயிகள் கடனை தற்காலிகமாக ஒத்தி வைத்தல்.

5. பல புதிய ரோடுகளைப் போடுதல்.

6. நெசவாளர்களுக்கு கூட்டுறவு நிவாரண சொசைடி ஏற்படுத்துதல். அவர்களுக்குப் போதிய பஞ்சநிவாரணம் கொடுத்தல் வேண்டும்.

## பிரிட்டனில் ராணுவ தளபதிகள் மகாநாடு

லார்க்ஹில், ஜூன் 25—

காமன்வெல்த் ராணுவ தளபதிகளின் மகாநாடு இன்று ஆரம்பமாயிற்று. இம்மகாநாடு 3 நாட்களுக்கு இரகசியமாக நடைபெறும்.

பிரிட்டிஷ் ராணுவ தளபதி பீல்ட் மார்ஷல் சர். வில்லியம் ஸ்லீம் மகாநாட்டை ஆரம்பித்து வைத்து சர்வதேச நிலைமையைப் பற்றி ரிபோர்ட் செய்தார். இம்மகாநாட்டில் முக்கியமான நோக்கம் கொரிய, மலேய மக்கள் போராட்டங்களில் கிடைத்துள்ள அனுபவங்களை வைத்து மக்களை எவ்வாறு அடக்குவது என்பது தான். மகாநாட்டில் கானடா, ஆஸ்திரேலியா, நியூஜீலந்து, ஆஸ்திரியா, இந்தியா, பாகிஸ்தான் முதலிய நாடுகள் கலந்து கொண்டுள்ளன. இந்தியாவின சார்பாக தளபதி கரியப்பா கலந்து கொண்டுள்ளார்.

## ராயபுரம் கற்பழிப்பு வழக்கு

### கிராதக சப்-இன்ஸ்பெக்டர் கமிட் செய்யப்பட்டார்

சென்னை, ஜூன் 23—

இன்று மாகாண பிரதம மாஜிஸ்ட்ரேட் திரு. எம். ஏ. வெங்கடரமண நாயுடு, சப்-இன்ஸ்பெக்டர் எம். எஸ். நீலகண்டனை கற்பழிப்பு வழக்கு சம்பந்தமாக செஷன்ஸ் கோர்ட்டிற்கு கமிட் செய்தார். சப்-இன்ஸ்பெக்டர் எம். எஸ். நீலகண்டன் கல்மண்டபம், மார்க்கட் சந்து 3-வது தெருவைச் சேர்ந்த திருமதி கோவிந்தம்மாள் (18 வயது) என்பவரை கற்பழித்தாக குற்றஞ்சாட்டப்பட்டுள்ளது. 13-2-52 இரவில் நடந்த இந்த துராக்கிரமான செயல் சம்பந்தமாக வடசென்னை மக்களும், கம்யூனிஸ்ட் கட்சியும் மிகுந்த கவனம் செலுத்திப் பாடுபட்டதும் அதன் விளைவாக வ்ஷி சப்-இன்ஸ்பெக்டர் சஸ்பெண்ட் செய்யப்பட்டதும் யாவருமறிந்ததே.

செஷன்ஸ் நீதிமன்றத்தில் இவ்வழக்கு விசாரிக்கப்படுவதற்கு போதிய சாட்சியங்கள் உள்ளன என்று மாஜிஸ்ட்ரேட் தனது தீர்ப்பில் கூறி கமிட் செய்தார்.

குற்றவாளியான சப்-இன்ஸ்பெக்டருக்கு ஜாமீன் கொடுக்கப்பட்டுள்ளது.



### தரிசு உழுத விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டனர்

தலைவாசல், ஜூன் 20—

"தலைவாசலிலும், வேப்பம் பூண்டி, ஆறகளூர், புத்தூர் போன்ற இடங்களிலும் கடந்த 5 ஆண்டுகளாக ஏழை விவசாயிகள் நூற்றுக்கணக்கான ஏக்கர் தரிசு நிலத்தைப் பண்படுத்தியிருந்தனர். இப்பொழுது சர்க்கார் அவர்களை அந் நிலத்திலிருந்து வெளியேற்றியிருக்கிறது. மீண்டும் அந்த நிலத்தை அந்த விவசாயிகளுக்கே திரும்பித் தரவேண்டும்" என தலைவாசல் பிர்க்கா விவசாயச் சங்கம் சர்க்காரைக் கேட்டு கொண்டுள்ளது.

சின்னஞ்சிறு நிர்ப்பாசன திட்டங்களை நிறைவேற்றுவதின் மூலம் எப்படி நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலத்தை வளமான நன்செய் நிலமாக மாற்றமுடியும் என விவசாய சங்கம் தன் அறிக்கையில் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளது.

## தானிய விலை உயருகிறது

### பரமக்குடி

கண்ட்ரோல் எடுப்பதற்கு முன்னால் 90 படி கொண்ட கலம் நெல் ரூ. 30 ஆக இருந்தது, ஜூன் 23ம் தேதியன்று ரூ. 40 ஆக உயர்ந்துவிட்டது. கம்பு ரூ. 33 லிருந்து ரூ. 40 ஆகவும், வரகு ரூ. 18 லிருந்து ரூ. 25 ஆகவும், குதிரையாலி ரூ. 18லிருந்து ரூ. 25 ஆகவும் அதிகரித்துவிட்டது.

### துறையூர்

50 படி கொண்ட அரிசி மூட்டை கண்ட்ரோலுக்கு முன் ரூ. 44 ஆக இருந்தது. இது 19-6-52 முதல் ரூ. 48 முதல் ரூ. 50 வரை உயர்ந்துவிட்டது.

### பேராவூரணி

இங்கு நெல் மூட்டை கண்ட்ரோல் எடுத்தபின் 21-6-52ம் தேதியன்று ரூ. 20 ஆக அதிகரித்து விட்டது. முன்பு ரூ. $13\frac{1}{2}$ ஆக இருந்து வந்தது.

## விவசாய சங்க ஸ்தாபனம்

சக்ரசாமந்தம், ஜூன் 21—

19-6-52ம் தேதியன்று தஞ்சை தோழர் எஸ். ராமலிங்கம் எம். எல். ஏ. தலைமையில் இவ்வூரில் விவசாய சங்கம் திறக்கப்பட்டது. தோழர்கள் சின்னைய்ய நாட்டார் தலைவராகவும், சின்னதம்பி நாட்டார் உப-தலைவராகவும், டி. பி. மாணிக்கம காரியதரிசியாகவும், அம்பலராசு நாட்டார் பொக்கிஷதாராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## நடக்கவிருப்பவை

பொன்னேரி (சென்னை) ஐக்கிய ஜனநாயக முன்னணியின் சார்பாக 29-6-52 ஞாயிறு 4 மணிக்கு கடைவீதியில் மாபெரும் பொதுக்கூட்டம்; தோழர் ஜீவா, திரு. கே. விநாயகம் எம்.எல்.ஏ. முதலியோர் சொற்பொழிவு; தோழர் கே. சீனிவாசலு நாயுடு தலைமை வகிப்பார்.

# டாலர் ஒலிபெருக்கி சின்ஹா யார்?

டாக்டர் சத்யநாராயண சின்ஹா என்ற பார்லி மெண்ட் மெம்பரின் பெயர் பத்திரிகைகளில் அடிபட்டு வருகிறது. ஜூன் 4-ம் தேதியன்று, டில்லி பார்லிமெண்டில், நேரு சர்க்காரைக் கவிழ்ப்பதற்காக இந்தியாவில் நடக்கும் நாசவேலைக்கு பகிரங்கமாகவும், மறைமுகமாகவும் சோவியத் ருஷ்யா, சீனு, செக்கோஸ்லாவாகிய நாடுகள் உதவிவருகின்றன என்று அவிழ்த்துவிட்ட டாலர் அடிவருடியான இந்த காங்கிரஸ் 'அரிச்சந்திரன்' பூர்வோத்தரம் என்னவென்று கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டாமா?

சென்ற பார்லிமெண்டில் டாலர் டமாரமாய் விளங்கிய அமெரிக்க செல்லப் பிள்ளையான எம். ஆர். மசானியைப் போல, இந்த பார்லிமெண்டில் டாலர் ஒலிபெருக்கியாக சேவகம்செய்து வருகிறார் இந்த டாக்டர் சின்ஹா. இவர் எங்கே டாக்டர் பட்டம் பெற்றார் என்பது இன்னும் விளங்கவில்லை. தனது 16வது வயதில் இந்தியாவை விட்டு ஓடுவதற்காக கப்பலேறினார் என்றும் அவர் இன்னும் தெளிவாக்க வில்லை.

சோவியத் சேனையில் தான் காப்டனுக இருந்ததாகக் கூறினாரே, அது சுத்தப்பொய்யென்று தெரிகிறது. சோவியத் சேனையில், சோவியத் பிரஜைகள் தவிர வேறு அந்நியர் யாரும் சேரமுடியாது. தனது சோவியத் எதிர்ப்பு அபாண்டங்களை சுலபமாகப் பரப்புவதற்கு ஒரு சூழ்நிலையை உண்டாக்கத்தான், சோவியத் சேனையில் இருந்ததாக அவர் சரடு திரித்துள்ளார்.

அவர் மூன்று வருஷங்கள் ருஷ்யாவில் தங்கி யிருந்ததாகத் தெரிகிறது. யுத்தத்திற்குப் பிறகு ஜெர்மனி சென்று, இந்திய பத்திரிகை நிருபராக பெர்லினில் தங்கி யிருந்தாராம். ஒரு நடுவு நிலைமை நாட்டிலுள்ள பத்திரிகை நிருபர் என்ற முறையில் மேற்கு ஜெர்மனி, கிழக்கு ஜெர்மனிக்கு இடையே தாராளமாகப் போய்வர இவருக்கு பாஸ்போர்ட் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. மேஜர் பிரான்சிஸ் என்ற ஒரு இந்தியக் கிறிஸ்தவ ரோடு இவர் தொடர்புகொண்டு, சில கட்சிகளுக்கு ரகசிய தகவல் அனுப்பி வந்ததாகத் தெரிகிறது.

இந்தியா திரும்பியதும், "இரும்புத்திரை நாடுகளுடன் தொடர்பு கொள்வதற்குத் தன்னைப் பயன் படுத்திக் கொள்ளலாம் என்று இவர் தன்னை விளம்பரப் படுத்தி திரிந்தார். ஸ்விட்ஜர்லந்து இந்திய ஸ்தானிகராலயத்தில் இவருக்கு வேலை கிடைத்தது. அங்கு இருந்தபோது, கர்னல் நோட்டுகள் கடத்தும் தொழிலில் இவர் சம்பந்தப்பட்டதாகப் புகார் கிளம்பியவுடன் அங்கு விட்டு விலகினார்.

மீண்டும் பெர்லின் வந்து, ருஷ்யப் பிரஜையாக நடித்ததாகத் தெரிகிறது. அவர் பாஸ்போர்ட்டை பரிசிலனை செய்யும் போது அவர் கைது செய்யப்பட்டார். யாரோ ஒரு கோவர்த்தன் என்பவரின் உதவியால் அவர் தப்பித்தார். அவர்தான் இப்பொழுது, இந்திய பார்லிமெண்டில் தனது மூன்றாவது முனையை ஆரம்பித்துள்ளார். டாலர் சேவகம் புரிய காங்கிரஸ்கட்சி இவரை பகிரங்கமாக உபயோகித்துவருவதாகத் தெரிகிறது.

### சியாங் சர்க்கார் தான் சட்டப்படியான சர்க்காராம்

டோக்கியோ, ஜூன் 24—

"சீன தேசிய சர்க்கார் எனப்படும் சியாங்கேஷேக் சர்க்காரைத்தான் சீன முழுவதற்கும் சட்டப்படியான சர்க்கார் என, ஜப்பானிய சர்க்கார் அங்கீகரிக்கிறது" என்று இன்று பத்திரிகையாளர் கூட்டத்தில் ஜப்பானிய வெளிநாட்டிலாகா அதிகாரி மசயோஷிகிட்சுபோ கூறினர்.

"பீகிங்கில் உள்ள மக்கள் குடியரசு சர்க்கார், ஜப்பான் சரணாகதியடைந்ததற்குப் பிறகு ஏற்பட்டதலால், அதற்கும், ஜப்பானுக்கும் இடையே எந்தவிதமான உறவுகளும் ஏற்படுத்தப்படவில்லை, தற்சமயம் பீகிங் சர்க்காருடன் பேச்சுவார்த்தை நடத்த நாங்கள் தயாராயில்லை" எனவும் அவர் கூறினர்.

அமெரிக்க கைப்பாவைகளாய் ஆட்சிபீடத்தில் அமர்ந்து கொண்டு, ஜப்பானிய மக்களுக்குத் துரோகம் செய்துவரும் இந்த கும்பல், சீன மக்களின் துரோகியாகிவிட்ட சியாங்கை ஆதரிப்பதில் ஆச்சரியமொன்று மில்லை.

## ஜனசக்தி நிதி வசூல்

### (தோழர் மணலி கந்தசாமி மூலம்)

| | | | |
|---|---|---|---|
| ஒரு அநுதாபி, திருத்துரைப்பூண்டி | ... | 100 | 0 0 |
| எம். கே. டி. பிள்ளை " | ... | 25 | 0 0 |
| மங்கநல்லூர் நாடகத்தில் தலைமை வகித்த மணலிக்கு நன்கொடை மூலம் | ... | 51 | 0 0 |
| கருப்புக்களர் கிராமவாசிகள் | ... | 19 | 0 0 |
| ஆகமொத்தம் | ... | 195 | 0 0 |

## பிகானீர் மில்லில் தமிழ் தொழிலாளர் படும்பாடு

கங்காநகர், ஜூன் 18—

சாதுல் டெக்ஸ்டைல்ஸ் ஜே. பி. வஸ்த்ரவா கம்பெனிக்கு சொந்த. சென்ற ஆண்டில் புதிதாக வேலை தொடங்குவதற்காக பல ஊர்களிலிருந்து ரயில் சார்ஜும், வழிச்செலவும் கொடுத்து டில்லியில் கொடுக்கும் சம்பளம் கொடுப்பதாகச் சொல்லி தமிழ் தொழிலாளர்களை திரட்டி இங்கு கூட்டிவந்தனர்.

தொழிலாளிகள் இங்கு வந்து ஒருமாதமான பிறகு 472 ஊசிகள் கொண்ட மிஷினில் ஒரு தொழிலாளி இரு பக்கங்களில் பார்க்க வேண்டுமென்றும், சம்பளம் ரூ. 90 மட்டும் கொடுப்பதாகச் சொன்னார்கள். சகல மிஷின்களும் ஓடிய பிறகே ரூ. 110 கொடுப்பதாக கூறினர்.

இது பிடிக்காமல் பல தொழிலாளிகள் கணக்கு தீர்த்துக் கொடுத்தால் ஊர் திரும்புவதாக கேட்டனர். மூன்று மாதத்திற்குள் நீங்கள் போவதாய் இருந்தால் உங்களுக்குக் கொடுத்த ரயில் சார்ஜையும், வழிச்செலவையும் பிடித்துக்கொண்டு கொடுப்பதாக சொன்னார்கள்.

தொழிலாளிகள் வெளியூர்களிலிருந்து வந்தவர்களானதால், திடீரென்று ஒன்றும் செய்யமுடியாமல் நிர்வாகத்திடம் சம்பள உயர்வு கேட்டு வந்தனர். முதலில் எல்லா மிஷின்களும் ஓடினால் சம்பள உயர்வு கொடுக்கச் சொன்னார்கள். இவ்வாறு 6 மாதங்கள் ஆய்விட்டன.

டில்லியில் உள்ள மில்களில் 400 ஊசிகள் கொண்ட மிஷின் ஒரு சைடு செய்வதற்கு ரூ. 98 கொடுக்கிறார்கள். இங்கு 472 ஸ்பிண்டில் உள்ள மிஷினில் 2 சைடுகள் பார்க்க ரூ. 90 கொடுக்கிறார்கள்.

சம்பளத்தை அதிகமாகக் கொடுங்கள் இல்லாவிட்டால் கணக்கு தீர்த்துக் கொடுத்து விடும்படி தொழிலாளிகள் கண்டிப்பாகக் கேட்டனர். முதலாளி 6 ரூபாய் கூடுதல் வாடகையாகக் கொடுத்தார். இதுவும் மில்லயனில் உள்ளவர்களுக்குத்தான். மார்ச் மாதத்தில் இந்தத் தில்லுமுல்லுகளை எதிர்த்து தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தனர்.

3 நாட்களுக்குப் பிறகு நிர்வாகம் பணிந்து ரூ. 105 சம்பளம் கொடுப்பதாக கூறிற்று. ஆனால் மறு நாளே சம்பளத்தை உயர்த்தாமல் அதாவது 29-5-52ல் திடீரென்று மின்சாரக்கோளாறுஎன்று கூறி 1,000 தொழிலாளர் வயிற்றில் மண்ணை போட்டு வெடிக்கும் பிகானீர் பாலைவனத்தில் தவிக்க விட்டு மில்லை மூடிவிட்டார்கள். பாதிக் கூலியும் கொடுக்கவில்லை கடையில் சாமான்கள் கொடுப்பதையும் நிறுத்திவிட்டனர். ரயில் வே ஸ்டேஷனிலும் காவல் வைத்து விட்டனர். இதனால் தொழிலாளிகள் வேறு வழியின்றி கால் நடையாக குழந்தை குட்டிகளுடன் பாலைவனத்தில் பிரயாணம் செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

### பஞ்சம் தீர்க்க கொழும்பு மக்கள் நன்கொடை!

கொழும்பு, ஜூன் 12—

கொழும்பு கரிக்கடை நலவுரிமைச் சங்கத்தினர் 'ராயலசீமா பஞ்ச நிவாரண நிதிக்காக' ரூ. 101 நன்கொடை யளித்துள்ளார்கள்.

## வெகுஜனக் கிளர்ச்சி வெற்றி காணுவது நிச்சயம்

தோழர் சி.ஏ. பாலனைத் தூக்கி லிடக்கூடாது என்று வற்புறுத்தும் ஆயிரக் கணக்கான தந்திகள் சென்னை முதலமைச்சர் ராஜாஜியின் கையிலும் கிடைத்திருக்கின்றன. கிளர்ச்சியின் மறுக்க முடியாத நியாயத்தை உணர்ந்ததினல்தான், சட்டமந்திரி குட்டிகிருஷ்ண மேனன், தந்திகளையும், மகஜர்களையும் ராஜாஜி பரிசிலனை செய்து கொண்டிருக்கிறார் என்று சில தினங்களுக்கு முன் கூறினர்.

ஆகவே, நம்முடைய இயக்கம் இன்னும் தீவிரமாக நடைபெறுவதின்மூலம், தோழர் பாலன் உயிரை நிச்சயம் மீட்கமுடியும் என்ற நம்பிக்கை நமக்கிருக்கிறது. கடந்தகால அநுபவத்தின் அடிப்படையில் உருவான நம்பிக்கை இது.

வடமதுரை விவசாயிகள் சங்கம் ஒரு தந்தியும், 200 பேர் கையொப்பமிட்ட மகஜரும் ஜனாதிபதிக்கு அனுப்பியுள்ளது தவிர 100 பேர் தனித்தனியாக ஜனாதிபதிக்கு கார்டுகளும் அனுப்பியுள்ளனர்.

சென்னை ஓட்டேரி ஸ்ரீ பரமேஸ்வரி ஓட்டல் தொழிலாளர்கள், திருக்கோயிலூர் ஜனசக்தி வாசகர்கள் திருக்கோயிலூர் கம்யூனிஸ்ட் கட்சி, இராணிப்பேட்டை பொது மக்கள், தொழிலாளர் சங்கம், மன்றங்கள், ஆகியவற்றின் சார்பில் ஜனாதிபதிக்கும், சென்னை முதலமைச்சருக்கும் தந்திகள் அனுப்பப் பட்டுள்ளன.

பிரபாத் கேப் ஓட்டல் தொழிலாளர் வால்டேக்ஸ் ரோடு ஏரியாவிலிருந்து 100 பேர் கையெழுத்திட்ட மகஜர் அனுப்பப்பட்டுள்ளது.

கிழக் கோட்டை முற்போக்கு வாசக சாலையின் சார்பில் 332 கையெழுத்துகள் கொண்ட மகஜர், அனுப்பப்பட்டுள்ளது.

திருக்கோவிலூர் அருகில் பையூர் விவசாய சங்க சார்பில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் (19-6-52) பாலன் விடுதலை தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

17ந் தேதியன்று தோழர் ராம மூர்த்தி கோயில் பட்டியிலிருந்து அருப்புக்கோட்டை போகும் வழியில் விளாத்தி குளத்திலும், கரிசல் குளத்திலும் அவருக்கு வரவேற்புக் கொடுக்கப்பட்டது.

விளாத்திகுளத்தில் ஜனசக்தி நிதிக்கு ரூ. 11 கொடுக்கப்பட்டது.

இராமேஸ்வரம் ஜனநாயக இளைஞர் கழக முக்ய உறுப்பினரும், பாத்பேங்கிங் பீரோ மானேஜருமாகிய தோழர் வி. ஷண்முக சுந்தரம், தன் திருமணப் பரிசில், ரூ. 11 ஐ ஆறு "மாத ஜனசக்தி சந்தாவாக அனுப்பி யுள்ளார்.

## கொக்கிரகுளம் சிறை வைத்திய அதிகாரியின் கொடுமை

### பதனீர் இறக்கும் தொழிலாளி ஒருவர்பலி!

கொக்கிரகுளம், ஜூன் 23—

திருநெல்வேலி ஜில்லா, ராஜம் பச்சேரி கிராமத்திலுள்ள பதனீர் இறக்கும் தொழிலாளர்கள் 13 பேருக்கு ஒரு மாதத் தண்டனை விதிக்கப்பட்ட செய்தி ஜனசக்தியில் பிரசுரித்திருந்தோம்.

அந்த 13 தொழிலாளிகளில் ஒருவர் ராமையா நாடார். தினம் 40 பனை ஏறி இறங்கும் நல்ல கட்டுமஸ்தான உடலுடைய அவர், சிறை வாழ்க்கையில், 70 பேருக்குமேல் இரு அறையில் அடைக்கப்பட்டு புழுக்கறையில் வாடியதால் உடல் மெலிந்தார். ஜுரம் கண்டது. சிறை டாக்டர் கவனிக்கவில்லை இரண்டு நாட்களாய். 3-வது நாளும் கடுமையான ஜுரம் அடித்தும், தண்டனை முடிய ஒருவாரம் தானே இருக்கிறதெனக்கூறி ஆஸ்பத்திரியில் அனுமதிக்க மறுத்து விட்டார். சரியான மருந்தும் கொடுக்கவில்லை. நாலாவது நாள் (18-5-52) தான் அவர் நிலைமையைக் கண்டு பயந்த ஜெயிலர் அவரை ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விட்டார். 22-5-52 3ந்தி மாலை 4½ மணிக்கு பாளையங்கோட்டை ஆஸ்பத்திரியில் அவர் இறந்திருக்கிறார். அன்றிரவுதான் அவர் பிடிக்கும், இதர்களுக்கும் லாக்கப்பிற்குப் பிறகு இந்த விஷயம் தெரியவந்தது.

ராமையா நாடாரின் மனைவியும், அவரது இரு பெண் குழந்தைகளும் இன்று அநாதையாக தெருவில் நிற்கின்றனர். 27-5-52ம் தேதி விடுதலையடைந்த 12 தொழிலாளர்களும் 13 பேர் சிறைக்கு வந்தவர்களில் ஒருவரை பலி கொடுத்து விட்டு அலறி அடித்துக்கொண்டு ஊர் திரும்பிப்போகிறார்கள். (ந.—கி.)

### சப்-ஜெயிலும்—மத்ய சிறையாகிறது

சேலம் சப்-ஜெயிலில் கைதிகள் உள்ளே செல்லும்பொழுது அவமரியாதையாகப் பேசி அடிக்கும் பழக்கம் சர்வ சாதாரணமாக இருந்து வருகின்றது. அன்பானந்தம் என்ற திராவிடக் கழகத்தைச் சேர்ந்த ரிமாண்டுக் கைதி சப்-ஜெயில் கேட்டில் இன்று மாலை ஹெட் வார்டரால் கடுமையாகத் தாக்கப்பட்டது முகத்தில் உதட்டின் அருகில் காயம் பட்டதாகத் தெரிகிறது. இது போல் கைதிகள் தாக்கப்படுவதும் — அவமரியாதையாகப் பேசுவதும், படிப்பறுத்துவதும் சர்வ சாதாரணமான விஷயம். சுமார் இரண்டு மாதங்களுக்கு முன்பு ஒரு சாதாரண கைதியை அடித்து கை முறிந்து விட்டதாகவும், ஆனால் அதுபற்றி அதிகாரிகள் ரிப்போர்ட் செய்யும்போது "தொட்டியில் இருந்து வழுக்கி விழுந்து விட்டதாக" ரிப்போர்ட்டு செய்தனராம். சப்-ஜெயிலில் தண்ணீர் நிலைமைமிகவும் மோசம். குளிப்பதற்கு கூட போதிய அளவு தண்ணீர் கிடையாது. இதுதான் இன்றைய ஆட்சியில் விசாரணைக் கைதிகளை நடத்தும் விதம்.

## சிங்கையில் பதிலிவேலைத் தொழிலாளர் அவதி

சிங்கை, ஜூன் 20—

சிங்கையில் மின்சாரக் குறைவின் காரணமாக பதிலித் தொழிலாளர்களுக்கு வேலையில்லாமல் போகிறது.

மின்சாரம் எவ்வளவு குறைக்கப்பட்டுள்ளதோ அந்த அளவிற்கு வேலை நேரத்தை குறைத்து சகல தொழிலாளிகளுக்கும் வேலை கொடுக்க வேண்டுமென்றும், குறைக்கப்பட்ட நேரத்திற்காக சம்பளப் பிடித்தம் செய்யக்கூடாது என்று சங்கம் கடிதம் எழுதியுள்ளது. ஆனால் நிர்வாகம் அதற்கு ஒரு பதிலும் தெரிவிக்கவில்லை.

17-6-52ல் பதிலிவேலைத் தொழிலாளிகள் தங்களுக்கு சரியானபடி வேலை கொடுக்கப்படவில்லை என்று மானேஜரைக் கண்டு கூறினர். மானேஜரும் அவருடைய டைம் கீப்பர்களான சுப்பு அய்யர், சிவசைலம்பிள்ளை என்பவர்களும் சேர்ந்து "வேலை கிடைக்காவிட்டால் மணிமுத்தா நதிக்கு கல் உடைக்கப் போங்கள்" என்று திமிராக பதில் சொன்னார்களாம். மேலும், அதிகமாகப் பேசினால் 1947ல் நடந்ததுபோல் துப்பாக்கிக் குண்டுகள்தான் கிடைக்கும் என்று பயமுறுத்தினதாகவும், தெரிகிறது.

### 2500 தோல் தொழிலாளருக்கு வேலையின்மை

வாணியம்பாடி, ஜூன் 22—

இங்குள்ள சுமார் 64 தோல் ஷாப்புகள் சரியாக வேலை செய்யாததால் சுமார் 2500 தொழிலாளர்கள் அவதிப்படுகின்றனர். ஒரு சில ஷாப்புகளில் ஆட்குறைப்பு செய்யப்பட்டுள்ளது. மற்ற ஷாப்புகள் பூரணமாக அடைக்கப்பட்டுவிட்டன. வேலையின்றி வாடும் தொழிலாளிகளுக்கு யாதொரு சலுகையும் அளிக்கப்படவில்லை. அவர்களுடைய குடும்பங்கள் பட்டினியால் வாடுகின்றன.

வேலை நடக்கும் ஷாப்புகளிலும் முதலாளிகள் நிரந்தர தொழிலாளிகளை நீக்கிவிட்டு தினக்கூலிகளை அமர்த்துகின்றனர். அவர்களுக்கு சட்டப்படி ரூ. 1-6-0 கூலி கொடுப்பதற்குப் பதிலாக 0-14-0 கொடுத்து வருகிறார்கள்.

பெண்:—முனிசிபல் சபைகளை ஜனநாயக நிர்வாகத்திற்கு உட்படுத்தவேண்டுமென்று முனிசிபல் தலைவர்கள் மகாநாட்டில் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை ராஜாஜி ஏற்றுக்கொண்டால் என்ன? கமிஷனர்களை வைத்து ஏன் தர்பார் நடத்தவேண்டும்?

ஆண்:—ஜனப்பிரதிநிதிகளான கவுன்சிலர்கள் கூடி ஜனநாயக ரீதியில் முனிசிபல் சபைகளை நடத்தத் தீர்மானித்து விட்டால், ஜனநாயகம் கட்டுக்கடங்காது போய்விடுமே. அதைக் கட்டுப்படுத்தி வைப்பதற்குத் தான் கமிஷனர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்கள்.

Edited, Printed & Published by G. Alavandar, at Janasakthi Press, Subodaya Buildings, 98, Mount Rd, M... 6. REGD. No M. 5934